# சிவஞான போதம்.

"மெய்கண்டாராவது, அவர் மாணாக்கர்களாவது, அல்லது அவர் பரம்பரையில் வந்தவர்களாவது சிவ. ஞானபோதத்தை மொழிபெயர்ப்பு நூல் என்றும், அல்லது பரஞ்சோதிமுனிவர் உபதேசித்தது வடமொழிச் சிவஞானபோதம் என்றும் ஓரிடத்தும் ஓர் காலத்தும் கூறவே இல்லை"
என்று சித்தாந்தத் தமிழ்ப் பத்திரிகையின் 239 - ம் பக்கத்திற் காணப்படுகின்றது.

1 - வது, திருக்கைலாச பரம்பரை ச சித்தாந்த பாநுவாகிய நமசிவாய மூர்த்திகள் மரபில் அநுக்கிரகம் பெற்ற திராவிட மகா பாஷ்யகர்த்தாவாகிய சிவஞானயோகிகள் வரலாற்றில், "பரஞ்சோதி முனிவர் திருக்கைலா சமலையினின்று நீங்கித் திருவெண்ணெய் நல்லூரை அடைந்து, அம்மெய்யுணர்வுடையோரைச் (சுவேதவனப் பெருமாளைச்) சந்தித்து, சிவஞானபோதத்தை நல்கி, இதனை ஈண்டுள்ளார் உணர்ந்துய்தற் பொருட்டு மொழிபெயர்த்துப் பொழிப்பும் உரைக்க" என்று காணப்படலானும்,

2 - வது. சிவஞானயோகிகள் சிவஞான போத மகாபாஷ்யத்துச் கிறப்புப் பாயிரத்தில் தமிழ்ச் சிவஞான போதத்தையுற்று, " இதன் முதனால் யாது" என்று தொடங்கி,“ இரௌரவாகமத்திற் பன்னிருசூத்திரத்தாற் செய்யப்பட்டது சிவஞானபோதம் என்பதோர் படலம்' என்றும், அதனை ஸ்ரீகண்ட ருத்திரர் நந்தி பெருமானுக்கு அருளிச்செய்தார் என்றும்," பரஞ்சோதி முனிவர் மெய்கண்ட தேவர் பால் வந்து, சிவஞான போதத்தை நல்கி இதனை ஈண்டுள்ளார் உணர்ந்து உய்தற்பொருட்டு மொழி பெயர்த்துச் செய்து பொழிப்புரைக்க" என்றும் அருளினாராகக் கூறப்படலானும்,

3 - வது, சிவஞானபோதச் சிற்பரையில்," முதனூற் பதினொராஞ் சூத்திரத்துட் “காட்டுவான்" என்பது மாத்திரையே யன்றி, " காண்பான்" என்பது கூறிற்றில்லையாலெனின் அறியாது வினாயினாய்; ஆண்டுக் காட்டு வாறும் என்ற உம்மை காண்பானுமாம் என எதிரது தழீஇ நிற்றலின்" என்று காணப்படலானும்,

4 - வது. பின்னும் 11. - ம் சூத்திரசிற்றுரையில் “ பத்தாஞ் சூத்திரத்தில் எடுத்துக்கொண்ட சுவாநுபூதிநிலை 11 - ம் சூத்தரத்திற் சென்றியைந்து முற்றுப்பெறுதலால், அதன் கண் மலையாமைப் பொருட்டு ஆசிரியர் (மெய்கண்டார்) “ சுவா நுபூதிமானாவன்” என்பதனையும் " அரன் கழல் செலும்" என 11 - ம் சூத்திரத்தானே ஒருங்கு வைத்தோதினாராகலின், அது மாதன்.மையானும், அவ்வாறின்றி மொழி பெயர்த்தல் யாப்பால் நூல் செய்திருப்பான் புகுத்த ஆசிரியர் வேறுபடச் செய்துரை யாராகலானும் என்பது; இதனானே முதனூலிற்" சுவாநுபூதிமான்" என வாளா கூறியதனை 11 - ம் சூத்திரத்துப் " பக்தி செய்க " என்ற தின் பின்னாகக்கொண்டு கூட்டிவைத்து உரைத்ததே அத்ன் கருத்து என்பதூஉம் பெறப்பட்டது" என்று காணப்படலானும்,

5 - வது. "திங்களொடு கங்கைபுனையங்கணனார் செப்பு திருவருளினோடு, தங்குருவாம் பரஞ்சோதிமுனிவனினி தறை குறிப்புந்தகவாக்கொண்டு, துங்கமுறு சிவஞான போதமும் வார்த்திகப் பொழிப்புஞ் சுழிப்பு நீர் சூழ்ந், திங்கமருந்தமிழ் நாடு வீடுபெறப்புரிகுரவரிருதாள் போற்றி"
என்னும் திருக்கைலாசசந்தான குரவர்களின் தோத்திரங்களுள்ளே காணப்படும், இம் மெய்கண்டார் தோத்திரத்திலே, " தமிழ்நாடு வீடுபெறச் சிவஞானபோதம் புரிகுரவர்" என்று காணப்படலால், வடமொழியிலிருந்து தென்மொழியிற் சிவஞானபோதம் மெய்கண்டாரால் இயற்றப்பட்டதெனப் பெறப்படலானும்,

6 - வது. "முந்துமா கமத்தை யருட்டுறை யண்ணன் மொழிபெயர்த்துரைத்த நூன் முதலா முதல் வழிசார்பா மூன்று நூற்கருத்தும்" என்று உலகுடைநாயனார் அருளிச்செய்தலானும்,

7 - வது. இரௌரவாகமமானது சீடனுக்குச் சிவஞான போதத்தை உபதேசிக்கும் கிரமத்தைக் கூறியவிடத்தில்,

“நதீதீரே மடேவாபிசுஸ்தாநேகுருமந்திரே ।
பர்வதாக்ரே சுசிஸ்தாநே மண்டபம் தத்ரகாரயேத் ॥

"ஆற்றங்கரையிலாவது, மடத்திலாவது, நல்ல ஸ்தானத்திலாவது, ஆசாரியர் கிரகத்திலாவது, மலையின் உச்சியிலாவது சுசியாகிய ஸ்தானத்திலாவது மண்டபத்தைப் புரிக" என்று தொடங்கி, மண்டப அலங்காரமுதலியவற்றைக் கூறி, நல்ல நக்ஷத்திரத்திலே என்று தொடங்கி, நள்ளிருட்காலமே ஞான தீக்ஷைக்கு வாய்ந்த காலம் என்றும், நள்ளிருள் என்ற தின் பொருள் யாது என்றும் உரைத்து, அதன் பின்னர்,

பாவநாதீக்ஷயா சைநம் சுத்தம் கிருத்வாயதாவிதி
சிவஞானபோதசாஸ்திரஞ்ச தத்யாத்பத்யசிந்தநம் ।
அநுகிராஹ்யஸ்து ய : சிஷ்யோ வாங்மந : காயகர்மபி: ।
அர்த்தபிராணாபிமாநாநி சத்குருப்யோ நிவேதயேத் ॥

"பாவனாதீக்ஷையினாலே இவனை (சீடனை) விதிப்பிரசாரம் சுத்தனாக்கி, பத்தியசிந்தனத்துக்குரிய சிவஞானபோத சாஸ்திரத்தை (அவனுக்கு) ஆசாரியர் கொடுக்க; வாக்கு மனக் காயங்களினாலே அநுக்கிரகிக்கற்பாலனாகிய எந்தச் சீடன் உளனோ அவன் ஆசாரியர் பொருட்டுப் பொருள் உயிர் அபிமானம் என்பவற்றை நிவேதிக்க" என்று கூறலானும் சிவஞானபோதம் இரௌரவாகமத்தில் உள்ளது என்றும், பரஞ்சோதிமுனிவர் மெய்கண்டாருக்களித்தது வடமொழிச் சிவஞானபோதம் என்றும், தென்மொழியிலுள்ள சிவஞானபோதம் வடமொழிச் சிவஞானபோத வழித்தாயது என்றும் மேலே கூறியவாற்றால் உணரப்படும்.

ஸ்ரீ காசிவாசி - செந்திநாதையர்.
சித்தாந்தம் - 1913 ஹு - அக்டோபர் மீ